ஸ்ரீராமஜெயம்.

# கஜேந்திரமோக்ஷம்.

மூலபாடம்.

## திருவடிதாசர்

செய்தருளியது.

---

இஃது
ஏட்டுப்பிரதிகளில் பாடந்தோறும் ஒன்றுக்கொன்று
ஒவ்வாமலும் - எழுத்து - சொல் - பொருள் - தொடர்ச்சியில்லாமலும்
சிதைந்தும் இருக்கின்றதை விலக்கி, யாவருக்கும்
உபயோகமாகும்பொருட்டுச்
சென்னைமாநகரத்து
க்ளோதிங்போர்ட்மானேஜர் - பூவைசியப்பிரபு
சிற்றேரி

**௱-௱, அருணகிரிமுதலியார்**

கேட்டுக்கொண்டதால்

காஞ்சிபுரம்

**லக்ஷ்மணமுதலியாரால்**

பலபிரதிகளைக்கொண்டு ஆராய்ந்து பிழைகளைத்திருத்தி

**பு - வீரராகவமுதலியாரால்**

பரிசோதிப்பித்து
தமது
திராவிடதீபிகைஅச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

---

சாலிவாகனசகாப்தம் - ௲எ௱௯ - இச் - சரியான, சுபகிருது [illegible] ஆனிமீ.

இதின்விலை - அணா, ௰௨.



நன்றாக.



குருவாழ்க.



குருவேதுணை.

# கஜேந்திரமோக்ஷம்.

## காப்பு.

பார்புகழ்கஜேந்திரன்றன்பரகதிகதைதனையன்பால்
ஏர்தமிழ்கவியாற்சொல்லவென்னுளத்திருந்துகாப்பாய்
வார்திரைகுதித்துவாளைவயற்றலைநாறிற்பாயுஞ்
சீர்குருகூரில்மேவிசிர்துரத்தமர்ந்ததேவே.

பூதன்பேய்பொய்கைமாறன்புகழ்மண்டங்குடிமன்மங்கை
நாதன்றென்புதுவைவந்தநன்முனிகோதைதொண்டர்
பாததூளிமழிசைமன்னன்பாணன்கோளூர்மன்றுள்ளன்
தோதகப்பிறப்பைநீக்கத்துணையெனக்கொள்ளுவேமால்.

மங்குறேய்தெங்குபாளைவாவியிற்றோற்றக்கண்டு
அங்குரவாளைபாய்ந்துவச்சங்கொண்டிடுமூதூர்
தங்குமாவெதிராஜன்றன்றாளிணைசிரமேற்கொண்டு
கங்குலெல்லினுமன்னுனைக்காதலோடகத்திற்கொள்வாம்.

கனங்குழலசிசண்முல்லைபல்லெனக்கருதுமாதர்
தனமனையெனுமூவாசைதடிந்தமாவெதிராஜன்றன்
வனபதமடைந்தநான்கோடெழுபதுமகுடச்சிங்கா
தனக்குருராயர்தாள்கள்சந்ததம்றஞ்சிநிற்பாம்.

சாதகக்கடல்கடக்கச்சதாதிருவாய்மொழிக்கு
மேதகுமுப்பத்தாறாயிரப்படிமிடைந்ததூய
மாதவற்கடியனம்மனவாளமாமுனியின்சீர்த்தி
நாதகவழுத்தியேத்திநண்ணுதுமவனற்றாளே.

## நூல்.

ஜெகதலத்தரசனானச்செறிபரிச்சித்துராஜன் *
சுகர்பதம்போத்திசெய்துதும்பியைப்பொருதிநின்ற *
மகரமுதலைதன்னைவதைத்தவ்வாரணத்தையன்று *
ககபதிவூர்திகாத்தகாரணஞ்சொல்லுமென்றான். (க)

சொல்லிலெயரியைச்சொல்லுஞ்சொல்லதுசொல்லதாகும் *
அல்லெனும்வினையுநீங்குமறிவுமேலறிவதாகும் *
வல்லதாம்பேரின்பத்தைமருவியுண்டிருக்கலாகும் *
நல்லதுகேட்கலுற்றாய்நாதனேகேளுமென்றே. (உ)

மாயவனருளினாலேவகுத்திடுமுலகிற்கியாதி *
வியாதமாரிஷிமுன்னாளில்விளம்பியகதையைப்பாண்டு *
சேயெனுந்தருமனுக்குச்செப்புநாரதர்சொற்கேட்டு *
நேயமாயானுஞ்சொல்வேனெறியுடனிருந்துகேண்மோ. (ங)

சீருறுகலசமப்பிற்றிடஒன்றுண்டதனின்மீது *
மேருவுண்டதற்குமூன்றுமின்னியசிகரமுண்டு *
தூரமுமகலர்தேவர்தொகையினாயிரமாங்காதம் *
காரணமாயிருக்குஞ்சிலையெலாங்கனகநேராம். (ச)

அன்னிலைமுனிவர்தேவரருந்தவம்புரிந்துநெஞ்சில் *
உன்னியபொருளைமாயோனுகந்தளித்திடவேகொள்வர் *
கின்னரர்கருடர்க்கியாதிகேசரர்முதலாய்வாழ்வர் *
பின்னுமவ்வனத்திலுற்றபெருமையுமுரைக்கலுற்றாம். (ரு)

மாதளைமாவிலங்கமராமரம்பாரிசாதம் *
சூதநாரத்தைவில்வஞ்சுந்தரக்கமுகிலந்தை *
தாதுசேர்தேவதாரிசந்தநங்கதலிக்கொன்றை *
சேதளமகிழ்செந்தாழைசெம்மரஞ்சம்பசோகம். (சா)

சன்னலாலத்திப்பாலைகாஞ்சிரமிலுப்பைவேம்பு *
புன்னை[illegible]ப்பிராணிவேங்கைபுன்குமந்தாரைமூங்கில் *
வன்னிசண்பகம்லவங்கமரகதம்வயிரமாச்சா *
தென்னுருத்திராக்ஷநெல்லிதேக்குபாதிரிபலாவும். (எ)

முருக்கெலுமிச்சையிஞ்சிமுந்திரிசமர்த்தம்வேலும் ※
நெருக்கியவளர்கடாரைநேரிளவஞ்சிதாலம் ※
செருக்கியகடுக்காய்தான்றிசெறியலத்தருவுமன்றி ※
மருக்கொழுந்துளபமுல்லைமல்லிகைவகையனேகம். (௮)

அவ்வனந்தன்னிலேவொட்டகம்பரியாளிசிங்கம் ※
கவ்வியவேங்கையேனங்கரடிமான்கலைகடம்பை ※
எவ்விடம்பார்க்கிலுங்காரெருமையும்பசுவுஞ்சேவும் ※
ஒவ்வியகவிகள்மற்றுமுண்டெனுமிருகமுண்டு. (௯)

சக்கரவாகப்புள்ளுஞ்சாதகஞ்சிகிசகோரங் ※
குக்குடந்தாராவன்னங்கோகிலங்கிள்ளைகாகங் ※
கொக்குடன்கல்விநாரைகூளியேராந்தைகூகை ※
தக்கவல்லூறுடன்ராஜாளிபல்பறவைபோகம். (௰)

பலபலமிருகமார்ப்பும்பக்ஷிகளார்ப்புஞ்சாயுஞ் ※
சலதியினார்ப்புந்தாருதருசருகார்ப்புஞ்சால ※
கலைதெரிமுனிவர்தேவர்கருடர்கந்தருவரார்ப்பும் ※
நிலையராமங்குணத்தைநிகழ்த்துதற்கருமையாமால். (௰௧)

தாவியககனவீதிதனைழுத்தவண்டருக்கள்மாறு ※
பூவிளம்பிஞ்சுங்காயும்பொழிசுவைக்கனிகளோடும் ※
வாவிகள்வீசும்வாசவாரிசங்குவளையாம்பல் ※
மேவியேயிருக்குமந்தவெற்பினைச்சூழ்திக்கெல்லாம். (௰௨)

பூரணமாகநித்தம்பொழிமதுவனத்திலுள்ள ※
வாரணக்குழுவிமிஞ்சிமதத்துமற்பொருதுங்காலை ※
தாரணிநடுங்குஞ்சிங்கஞ்சார்த்தூலஞ்சர்ப்பமிந்த ※
காரணமேதோவென்றுகலங்கியேவெருவியோடும். (௰௩)

பன்றியைதுரத்திப்பற்றிப்பாரினில்மோதுஞ்சின்ன ※
அன்றிலைப்பிடித்துவீசுமரங்களையடித்துச்சாடும் ※
குன்றினைக்குலுங்கத்தாக்குங்குரங்கினைக்குகையிற்சேர்க்கும் ※
மின்சிறைபக்ஷிவானமேவியேபறக்கச்செய்யும். (௰௪)

பாரியசிங்கம்பாளியயர்ந்துதம்மலையிலேறும் *
கீரிகளுடும்புபூனைகிண்டிதம்வளையிற்பூரும் *
வீரியபுலிபல்லூகம்வெருண்டுதம்முழையிலேகும் *
நீரினில்மயிடமூழ்கிநீந்தியேதிரியுமன்றே. (௰௫)

கன்னலைமுறித்துமெல்லுங்கதலியின்கனியைத்தின்னும் *
செந்நெலைபுசிக்குந்துள்ளுஞ்செறிவிளாங்கனியைக்கொள்ளும் *
அந்நிலையானைக்கெல்லாமரசனாயிருக்கும்யானை *
தன்னினம்பிரிந்துகோடிகரிணியோடிருந்ததன்றே. (௰௬)

அல்லவோர்நாளிலேயுமறிந்திடாவத்தந்திக்குத் *
தொல்லைநாட்செய்த்தீமைதொடர்ந்தநாளினாலாகி *
எல்லையாம்வனத்தைவிட்டுவெண்ணிலாகரிணியோடு *
மெல்லுநல்லுணவுதேடிமேய்ந்ததுவனேசந்தரம். (௰௭)

தாமரையல்லிநெய்தற்றண்புனற்கண்டுதோய *
நாமலர்நறையுண்வண்டினாதகீதத்தினாலும் *
தோமறுபறவைபேசுந்தொனியினின்முழக்கத்தாலும் *
காமன்றனம்பினாலுங்காதலேமிகவுமாகி. (௰௮)

வாலெடுத்துயரவீசிவானிலேதுதிக்கைநீட்டி *
மாலெடுத்தரிவையோர்கள்வதனமேல்வதனஞ்சேர்த்து *
காலொடுகாலைப்பின்னிகரிணியர்மீதிலன்பாய் *
மூலத்தைமொழிந்துசெய்யும்லீலையைமொழியலாமோ. (௰௯)

பங்கயப்பொய்கைதன்னைப்பார்த்துடன்பரிவாய்க்கோடி *
மங்கையருடனேகூடவாரியினிழிந்துதங்கள் *
அங்கமுங்குளிரத்தோய்ந்துவருந்தியேதாகந்தீர்ந்து *
பொங்கமாய்த்தும்பிராஜன்புதுமலர்கொய்யுங்காலை. (௨௰)

முன்பொருசாபத்தாற்கந்தருவனுமுதலையாகி *
தன்பெரும்பலத்தினாலேஜலத்திடையிருந்துதந்தி *
பின்வருங்காலைநாடிப்பிடித்திடவுதைக்கநொந்து *
வன்பெருங்கரவுமீண்டுவந்துமுன்றாளைப்பற்றி. (௨௧)

யத்தியேயிழுக்குமந்தப்பாரியமுதலையின்வல் *
நெற்றினையப்பிளப்பனென்றுநீண்டதன்துதிக்கையாலே *
மொற்றிடக்கரவுநீரின்மூழ்கியேமேல்வந்தெய்தி *
வெற்றிதோர்வையுமிலாமல்வெகுண்டுபோர்செய்யுங்காலை. (உஉ)

கூடியேவர்த்துநின்றகரிணியர்கோடிபேரும் *
வாடியேவெருவிமெக்கமயங்கியேகரையிலேறி *
நாடியேநோக்கியிப்போநாதனுக்கிந்தபாடு *
தேடியேவந்தானம்மாற்செய்வதெனென்றுகூறி. (உ௩)

ஆள்தனைப்பிரிந்துசெல்லவரிவையர்குழாங்கடங்கள் *
தாளெழுந்தேகாநின்றுதயங்கியேயலையுமந்த *
வேளையிற்பற்றினின்றகரவிணைவிசியிப்போ *
மீளுவனென்றுதந்திமிகவுமேயிழுக்குங்காலை. (உ௪)

கரையின்வாயிழுக்குந்தந்திகரவுநீர்நடுவிழுக்கும் *
வரையுடன்வரையெதுத்துமற்பொருதுவபோல்வாயில் *
நுரைபெறவொன்றுக்கொன்றுநோக்கியேதாக்கியங்கம் *
உரைபடத்தசைகள்சிந்தவுதிரமும்பெருகுமன்றே. (உ௫)

நாற்பெருந்திசையுமண்ணுநடுங்கிடநாகராஜன் *
ஆற்பரித்துதிகொண்டுவப்பிணைக்கிழியமோதி *
காற்பெருங்குன்றுபோலக்கடித்திடுங்கரவைக்கண்டு *
கூற்பெரும்பிண்டம்விழப்புடைத்ததுதுதிக்கையாலே. (உ௬)

அடியதுபட்டுமூர்ச்சையாகியேதெளிவுகொண்டு *
கொடிதெனுங்கரவுமீறிக்கோபமாய்த்தந்தியின்வால் *
அடியெனுமூலந்தன்னிலமுந்தவேநகத்தாற்கீறி *
நெடிதெனுமூச்செறிந்துநீளொலாமூலவுமன்றே. (உ௭)

விழுமெழுந்திருக்குஞ்சீறுமேலுமாய்க்கீழுமாகும் *
சுழிபடநீரையெல்லாந்துதிக்கையாற்குழப்புமச்சக் *
குழுவுடன்கடகஞ்சிப்பிகூர்மமண்டூகமெல்லாம் *
பழுதிதுவேதோவென்றுபயந்துபாதாளஞ்சேரும். (உ௮)

இப்படிக்கொன்றேடொன்றுயிரவிதுபகலென்றுமல் *
அப்பிலாயிரமாண்டாகஇயார்ப்புகொண்டிருந்ததென்று *
தப்பிலாமுனிவன்சொல்லதரணியன்கரங்கள்கூப்பி *
எப்படியிருந்ததாம்பவெனவவன்சொல்லலுற்றான். (உக)

வேறு.

நீந்தியுநெடுநாட்கராவுடன்றாக்கியேசமர்செய்துஎம் *
நொந்துவாடியெநாலுதிக்கையுநோக்கியேமனமேக்கமாய் *
மூந்துதானுறைவெற்பிடத்தையுமூமைசெய்திடுமுறைமையும் *
எந்தநாளினிலகாணுவேனினியென்றுமின்னுமியம்புமால். (௩௨)

தாதுலாவும்வண்ணவிசேர்வனந்தன்னிலேதமர்சூழவே *
தீதிலாமலனேகநாள்வரைசெல்வமாகவிருந்தநாம் *
ஏதுகாரணமோதெரிந்திலமிங்குவந்துதிசைப்பதிப் *
போதுதாமினிசெய்வதேதெனவென்றுநின்றுபுலம்புமால். (௩௩)

சுற்றமுந்துணையானபேரையுஞ்சுந்தரத்தெழிற்றேசமார் *
பத்துலக்ஷமதானபேர்களைப்பாகனாப்பதியைப்பிரித் *
தித்தலத்திடைவந்தகப்படவென்றயன்சிரமெழுதிடப் *
பெற்றபேறிதுதானெனவென்றதுமின்னுநின்றுபுலம்புமால். (௩௪)

கரும்புதேனையருந்தியேசரம்பாடியாடிடுஞ்சோலையில் *
கரும்புசெந்நெல்கவித்துறுங்கதலிப்பலாநலகாய்கனி *
அரும்பிலைத்தளிர்பூவையர்தியருந்தியங்குறையாமனும் *
கருங்கராவிடவாயகப்படவந்தகாரணமேதெனும். (௩௫)

மதத்துவிரியக்குஞ்சரக்குழுதன்னொடேந்தவனத்திடை *
எதிர்த்தகேசரியன்றிநாயெருமைக்கிடாப்புலிமற்றதை *
அதிர்த்துவோடிவளைத்துகெற்ஜித்தடக்குமென்னிடவாண்மையெவ் *
விதத்திலுமிதைவெல்லவுமரிதென்றுநின்றுவிஎம்புமால். (௩௬)

சன்றிகண்ணீருதிர்த்திடும்பலகாரியங்கணினைத்திடுங் *
குன்றுபோலவிருந்தமேனியுங்குன்றிடுமிகவுங்குறைந் *
தின்றுநாமினிசெய்வதென்னெனியங்கியேமனமெலிவினால் *
நின்றிடுந்தலைநாளிலேசெய்ததிர்தையென்றுநினைந்திடும். (௩௭)

ஆறுபத்தெனும்வருஷமும்போர்நொந்துவாடியகுஞ்சரம் ✳
பூறுவத்துளஞானம்வந்துபொருந்தியேவினைபோக்கிட ✳
வேறுதிக்கிலையென்றறிந்ததுவேண்டியேசர்வேசனைக் ✳
கூறியேநெறிகொண்டுபேசுகுணத்திறலெதுதித்திடும். (௩௬)

ஆதியாகியுநடுவுமாகியுமந்தமாகியனாதியாய்ச் ✳
சோதியாகியுஞ்சுரூபமாகியுஞ்சுருதியோதிடுபொருளுமாய் ✳
நீதியாகியுநெறியுமாகியுநேசர்தம்மிடைநிலையுமாய் ✳
நாதனாகியும்விழுமீசனைநம்பினேனெனமுறையிடும். (௩௭)

மண்ணுமாகியும்விண்ணுமாகியும்வாயுதேயுவம்போதியாய்க் ✳
கண்ணுமாகியுமுயிருமாகியுங்காயமாகியமாயையாய்ப் ✳
பெண்ணுமாகியுமாணுமாகியும்பேடியாகியும்பெருமையாய் ✳
எண்ணெணுவடிவாகிநின்றிடுமீசனேயபையம்மெனும். (௩௮)

உருவமாகியுமருவமாகியுமொருமையாகியுமிருமையாய் ✳
மருவுமாகியுமலருமாகியுமாதவத்தவர்மதுரமாய்ப் ✳
பெருதுமாகியுஞ்சிறிதுமாகியும்பேதமாகியபேதமாய்க் ✳
குருவுமாயுபதேசமாகியகோவெநீகதியென்றிடும். (௩௯)

மனமுமாகியுமொழியுமாகியுமருவியேவனரூபமாய் ✳
இனனுமாகியுஞ்சசியுமாகியுமெறிதிரைக்கடல்மேருவாய்த் ✳
தனையனாகியுந்தந்தையாகியுந்தாயுமாகியுந்தமருமாய் ✳
அனையுமாகியபொருளெனும்பரமானவாயபையம்மெனும். (௪௰)

அறிவுமாகியுமறதியாகியுமடியவர்க்கெளிதாகியுங் ✳
குறியுமாகியுங்குணமுமாகியுங்குலமுமாகியுந்தொழிலுமைம் ✳
பொறியுமாகியும்புலனுமாகியும்புத்தியாகியும்பின்றுடர் ✳
நிறிருணாதியனாதகாரணதேவனேயபையம்மெனும். (௪௧)

அரனுமாகியுமரியுமாகியுமயனுமாகியுமலாதுமாய் ✳
நரருமாகியுஞ்சுரருமாகியுநாதமாயும்பிரணவமுமாய்ச் ✳
சரமுமாயிடைபின்கலைநடுசாக்கிரசொற்பனசுழித்தியாய்த் ✳
துரியமாகியதீதமாகியசுரூடனேயபையம்மெனும். (௪௨)

வேறு.

உலகமீரேழுநினைவிடையளித்தவொருவனீமூவுருவாகிப் *
பலபலவிதமாயிருவகையுயிர்ப்பின்பிரவியுட்பிறழுமாய்நிறைந்த *
நிலைமைநீயறிவைநின்னையாரறிவர்நீவகுத்திடுமிருமையினால் *
அலைப்படப்பட்டேனஞ்சலென்றினியுன்னையயீந்தென்னையாளுமால்.

ஞாயமேநிலையென்றுணுவத்தழுந்தச்சங்கருத்தையுந்திருத்திடவறியேன் *
மாயமாம்பாசப்பவக்கடற்கடந்துன்மதாரவாரிதியுணவறியேன் *
வீயவும்பிறவும்வருக்கிடுங்கருமம்வீணிலேசெய்துசெய்தலைத்தேன் *
ஆயும்வாறறியேனஞ்சலென்றினியுன்னையயீந்தென்னையாளுமால்.

தேனில்வீழீப்போல்வலைப்படுகயல்போல்சிறுவர்கைப்பறவைசிக்கியபோல்
கோனிலாப்படைபோல் மழையிலாப்பயிர்போல் கொம்பிலாப்படர்
[கொடியதுபோல்
கானகத்திருளின்முடவனூர்வதுபோல்கலங்கியேகராவிடைமெலிந்தேன்
ஆனெனின்னடிமைக்கடிமையாய்நீயந்தனையயீந்தென்னையாளுமால்.

இருவினைக்கிடமாயெடுத்தவிவ்வுடம்பையென்னுதென்னினைதனைவிருந்து *
பொருந்தியதுயரினனலினிலிளைபோற்பொலிமனமுருகிடப்பட்டேன் *
உருவினுக்குயிராயுயிரினுக்குணர்வாயொளியினுக்கொளியதாயொளிரும்
அறிவினுக்கறிவேயஞ்சலென்றினியுன்னையயீந்தென்னையாளுமால்.

உனையலாதொளிருமுலகிலைநீயுமுலகிலாதொளிர்வதுயில்லை *
நினைவிலேகனவுங்கனவிலேநினைவும்நேரிடும்நிலைமையாய்நின்றாய் *
கனவினைக்கரவின்பிணிப்பினின்றடியேன்கனாயிலேறிட்டதையருள்வாய்
அனைவருக்கரசே கருணைவாரிதியே யண்ணலே யென்னையாளுமால்.

பொறிபுலன்விஷயத்தழுந்திமெய்மறந்து புலைகுலைகளவினுக்கிசைந்து
நெறிமறையொழுகும்பண்புறத்திறிவாம்நீசர்தந்நேயமேநிலையாய் *
குறியுறுநினைவுகொண்டிருவினையின்குரம்பையினலையிலுழன்றேன் *
அறிவதையறியேனஞ்சலென்றினியுன்னையயீந்தென்னையாளுமால்.

பூதமைந்துதித்துப் பொறிபுலன்கரணம் பொருந்துமூன்றவத்தையுங்
நாதமீதுந்துரியமேற்றுரியநட்டனமெனநின்றனைநாவில் {கடந்து
ஓதுவார்பணிவார்க்குவந்துதேர்பொருளாயுதவுவபோலினிவந்து *
ஆதரவுடனேயஞ்சலென்றினியுன்னையயீந்தென்னையாளுமால் (௪௧)

சாக்கிரவவத்தைசொப்பனவவத்தை தயங்கியசுழுத்தியினவத்தைப் *
போக்கிடவறியாப்பொறிபுலன்வசனாய்ப்புன்றொழிற்புரிந்தலைவேனைக் *
காக்கவேயுனக்குக்கடனதாமிந்தக்கரணெனும்வினைதனையிருகூர் *
ஆக்கியேயடக்கின்றிறைகொடுத்தருளி யபயமீந்தென்னையாளெனுமால்.

சகலமுமுனதுரேமனத்துதித்ததன்மையினுணரவறியாமல் *
பகலிரவிரண்டைபிறப்புமூப்பிறப்புப்பண்டுபின்னிறைகுறைநாணுஞ் *
சுகந்துயர்நன்மைதீமைமற்றிவற்றின்சுழற்றிடுஞ்சிந்தையின்மயக்கச் *
[illegible]வினைநீக்கியஞ்சலென்றினியுன்னபயமீந்தென்னையாளெனுமால் ௫௧.

தொல்லைநாட்செய்தவினையினாலெடுத்ததும்பியின்றொக்குழல்வேனை *
வல்லதாங்கரவினுபத்திரத்தடியேன்வாதனைப்பொறுத்திடப்படலேன் *
நல்லதாமுனதுபாதபங்கயத்தை நல்கியிக்கரவினாற்படுமென் *
அல்லலையகற்றி யஞ்சலென்றினியுன் னபயமீந் தென்னையாளெனுமால்.

தென்றிசைவடக்குக்கீழ்த்திசைமேற்குத்தெரிந்திடவறிகிலேனாழ்ந்த *
புன்சமுசாரக்கடலிடைவீழ்ந்து பொய்யைமெய்யென்றிசைந்துழலும்
வன்றுயர்தீர்த்துனருளெனுநாவாய்வழங்கிலக்கரையிலேறிடுவேன் *
அன்பருக்கெளியாயஞ்சலென்றினியுன்னபயமீந்தென்னையாளெனுமால்

பூதலத்துதித்தநாளிதுவரைக்கும்பொய்வெருவந்தநன்னயத்தின் *
வாதனைக்குள்ளாய்மயங்கினேனுனதுமலரடிவணங்கிடப்பெறிலேன் *
தீதெனுங்கருமஞ்செய்யவேதுணிந்தேன்செய்ததுன்செயலெனவறியேன்
ஆதிநாயகனே யஞ்சலென்றினியுன் னபயமீந் தென்னையாளெனுமால்.

முற்பிறப்பதனிற்செய்ததீவினையின்மும்மலவுடலெடுத்துலகில் *
உற்பவித்தினியகதிபெறவுனதுவுண்மையினுணரவறியாமல் *
கற்பனைநிலையேநிலைமையாய்நிகழுங்காலமும்வீணிலேகழித்தேன் *
அற்புதப்பொருளேயஞ்சலென்றினியுன் னபயமீந்தென்னையாளெனுமால்.

வேறு.

இவ்விதத்தினிற்புண்டரீகமுமீசனைத்தொழுதேத்தியே *
சவ்விநின்றிடுமுதலைவாதனைக்கழியும்வாறினிகாண்கிலேன் *
எவ்விதமினியேதுசெய்குதுமென்றுயேகமனத்தனாய்
அவ்வுமுவ்வுடன்மவ்வுமாகியவாதியேயபயம்மெனும். (௫௬)

நானிலத்திடையீறுமெண்பது நாலிலக்கஞ்ஜீவனென் *
றானெடுத்தசராசரத்திலுலாவிநின்றிடுமுலவுதான் *
யானுனாத்திடவல்லனோவெயெனையாதரிப்பவராரினி *
நினைவுன்னிருபாதமேகதிதேவனேயபயம்மெனும். (௫௭)

கள்ளமாகியெயென்னைவந்துகடிந்துபற்றியகரவினைத் *
தள்ளியேவிடவேறுதிக்கிலைதருமனேயினிதயைசெயாய் *
எள்ளிலேயுறையெண்ணெய்போலவேழுலோகமிசைந்துதான் *
உள்ளுமாகிபுறம்புமாகியவொருவனேயபயம்மெனும். (௫௮)

வேறு

யாருடைக்கண்களாகியலரியிந்துவுமிருக்கும் *
யாருடைமகிமைதன்னையருமறைநால்கோதும் *
யாருடைபாதந்தன்னையனைவருந்தொழுமண்டங்கள் *
யாருடைவயிற்றொடுங்குமவன்றனக்கபயமென்னும். (௫௯)

எவனுடையருளினாலேபிறக்குமீரேழுலோகம் *
எவனுடைவயிறுதன்னிலிருக்குமிவ்வுயிர்களெல்லாம் *
எவனுடைமூர்த்திவந்துயெண்ணெணுதேவராகும் *
எவனுடையருளால்காக்குமவன்றனக்கபயமென்னும். (௬௰)

உண்டென்பரடியார்பங்கிலுத்தமரிடத்திலேயும் *
உண்டென்பரொருமையானயோகியருளத்திலேயும் *
உண்டென்பர்சாதுபக்கமுறுதிமெய்யுளாயிடத்தும் *
உண்டென்பரந்தெய்வமுள்ளதோயிலையோவென்னும். (௬௧)

உண்டென்பர்புவியின்வானினுட்பிறந்திசைகளெட்டின் *
உண்டென்பர்பசவிராவினொளிபெறுகதிரிரண்டின் *
உண்டென்பரணுவின்மேருவோமெனுமெழுத்திலெங்கும்
உண்டென்பரந்தெய்வமுள்ளதோவிலையோவென்னும். (௬௨)

அந்தரந்தன்னையானையண்ணாந்துபார்த்துச்சொல்லும் *
எந்தனைக்காக்கத்திக்காரில்லையோயிங்கேயாரும் *
எந்தநேரத்திலீசன்வந்தெனைக்காப்பானென்று *
சிந்தனைப்பண்ணுமெட்டுத்திசையினைத்திரும்பிப்பார்க்கும் (௬௩)

இந்திரன்முனிவர்தேவரிருடிவெண்டிக்குளோரும் *
சந்திரன்பரியேழுந்திசங்கரனயன்மற்றோரும் *
அந்தரவீதிநின்றுயானையின்முறையைக்கேட்டு *
எந்தடைவிதுக்குத்திக்காவொன்றுதாந்துயரினின்றார். (௬௪)

இப்படிசுகருஞ்சொல்லயிறைஞ்சிமன்னவனகைத்து *
மைப்படிசண்டன்வேதன்வாசவன்மற்றுளோரும் *
எப்படியார்க்கலுற்றாரிடர்தொலைத்திபத்தைக்காக்கச் *
செப்பமில்லாமனின்றசெதியையுணாமியென்றான். (௬௫)

துங்கமாமுனிவன்கேட்டுச்சுடர்முடியரசைநோக்கிச் *
சங்கையிலாமலத்திதற்பரன்றனையேநாட *
எங்களைநினைந்ததில்லையென்றயன்சிவன்மற்றோரும் *
அங்ஙனேயார்த்திருந்தாரொன்றுபின்னறையலுற்றான். (௬௬)

வேறு.

அகிலகாரணனாயனாதரக்ஷகனாயடியர்கட்கெளியனாய்நிறைந்த *
சகலஜீவதயாபரனுமாயுலோகதாயுமாயமலனாய்ப்பரனாய்ப் *
பகவனாய்ஜென்மநாமமிலவனாய்ப்பரத்துவமாயனசனாயலர்வித் *
தகனுமாய்சர்வ சரணியனாயுறவோ னவன்றனக் கபயமின்றெனுமால்.

நித்தனாய்முனிகளாற்றொழுங்கடவுளாய்நிராமயனுமாயெவர்க்கும் *
கத்தனாய்பரமபுருஷனாய்கருணாகரனுமாய்சதியருட்டேவாய் *
சுத்தனாய்விமலனாய்வியாபகனாய்சுருதிபாராயணனாயும் *
அத்தனாயுலோகநியாமகனானவன்றனக்கபயமின்றெனுமால். (௬௮)

பரபரப்பிரமமாய்பரஞ்சுடராய்பராட்டுநிற்குணன்றயாநிதியாய் *
விராட்டுபூரணனாய்நாதனின்மலனாய்விபவமாயறுகுணத்தவனாய் *
சுராட்டுதற்பரனாய்பிறப்பிறப்பிலியாய்சிற்பரனெண்குணத்தவனாய் *
சராசரங்கட்குசர்வ்வேசனாய்விரங்குஞ்சச்சிதானந்தனுக்கபயம். (௬௯)

அடியர்கள்கருணாலயனுமாய்சயம்பாயனைத்திலுமுயலுநற்றேவாய் *
படிமடிவேலைப்பரப்புமாயாலாய்ப்பாலனாயருள்குடையவனாய் *
குடிணடுகூவவேயெத்திமுக்குணனாய்குவலயத்தொளிருருவானோன் *
படிறுளக் கரவின் வாயினின்றென்னை பரிவுடனருள்வனின் றெனுமால்.

இடிநிகர்கரவால்கால்சரமோய்ந்துவேக்கமாயுயிர்தடுமாறி ※
படிவமுமுருகிவாலசைவற்றுயரிவுடனரற்றுபேரொலியால் ※
இடிபனலப்பாய்கால்வெளிபூவாயெண்ணுமும்மூர்த்தியின்முதலாய் ※
அடிக்ஷராமாதிமூலமேயெனுமம்முறையரிசெவிநுழைபோழ்தே. (௭௧)

வேறு

பங்கயத்திருவைப்பாரான்பணிமுடிநிழலைத்தேடான் ※
சங்குசக்கரமுமேந்தான்தன்னெதிர்தொழுதுநிற்கும் ※
இங்கிதக்கருடன்மீதிலேறிடான்பத்தனைக்காக்கக் ※
கங்கையைப்பெற்றபாதசாரியாய்கடுகிவந்தான். (௭௨)

அன்னகரிருந்தபேர்களதிசயமனத்தராகி ※
என்னகாரணமீதென்றேயேகமாய்க்கூடிநின்று ※
பன்னகாபரணன்றன்னைப்பரீக்ஷைகாண்டிடவரக்கர் ※
துன்னினரோவென்றெண்ணித்துயக்குடன்சொல்லலுற்றார். (௭௩)

யோகியர்தமக்குளுத்தருபத்திரஞ்செய்தவாறோ ※
கோகனன்மனதுநோகக்கொடியர்கள்புடைத்தவாறோ ※
பாகமேபுரியுநாளிலரக்கர்வந்தழித்தவாறோ ※
தோகையர்துகிலைப்பற்றிதுர்ச்சனர்களைந்தவாறோ. (௭௪)

துச்சனர்கூடிநின்றுதொடர்ந்தடியானைப்பற்றி ※
பச்சைமேனியனுமுங்கள்பரமனெங்கேகாட்டென்று ※
மச்சரம்வைத்துமெத்தவாதைசெய்தாரோவென்று ※
அச்சுதனடந்தபோதிலனைவருமாலோசித்தார். (௭௫)

நாதனைப்பிரியாலட்சுமிநாயகியுடுத்தசேலை
பாதிமுந்தாணியந்தபரமனார்பற்றியேகும் ※
போதுதானுமிந்தப்புதுமையையறிதுமென்று ※
மாதவன்பின்றொடர்ந்துமயிலெனச்செல்லலுற்றாள். (௭௬)

முடியவிழ்க்கேசஞ்சோரமுகங்குறுவேர்வைகொள்ள ※
அடியிணைக்குழையமெய்யிலணிமணியாரமாடக் ※
கொடியிடைத்துவளநீக்கொண்டலின்மின்னல்போல ※
நெடியவன்பின்னெருங்கிநேரிழைநடக்கலுற்றாள். (௭௭)

வேறு.

வாமதேவனுங்கௌரியும்விடைவாகனம்மிசையேறியே ✻
நாமகளுடன்கூடவேமறைநான்முகனன்னமேறியே ✻
காமனுமிந்திராணிவெண்மதக்கரியின்மீதினிலேறியே ✻
சோமனுந்தினகரனுந்தேரின்மேற்றெரிவைமாருடனேறியே. (௭௮)

விண்டலத்தினிலுள்ளபேர்களும்வீறுமெண்டிசையோர்களும் ✻
மண்டலத்தினிலுள்ளபேர்களுமாதவம்புரிவோருமார்க் ✻
கண்டருங்கௌதமரகஸ்தியர்கௌசிகர்முதலானபேர் ✻
கொண்டல்மேனியனணுகுமென்றுகுறிப்பறிந்தவர்கூறுவார். (௭௯)

அந்தரத்தொரீஇயருகினிற்றிருவமரரானோர்தொடர்ந்திட ✻
நந்துவீறிடுந்தொனியதோபலநாயிருந்திகிரியுமதோ ✻
அந்தமாகியகருடனுமதோவனந்தனுமதோநித்தியவை ✻
குந்தமேவியபெயர்களுமதோவென்றுநின்றுகைகூப்புவார். (௮௰)

மாயனேசரணென்பர்வாழ்திருமார்பனேசரணென்பரால் ✻
ஆயனேசரணென்பரச்சுதவமலனேசரணென்பரால் ✻
நேயனேசரணென்பர்நான்மறைநிருபனேசரணென்பரால் ✻
தூயனேசரணென்பர்சென்னியிற்சேர்த்திரண்டுகைகூப்புவார். (௮௧)

வந்ததேவருங்கூடிநின்றுபல்லாண்டிசைத்துவந்தனஞ்செய ✻
நந்தனுமதுகொண்டிடாமலெநாகமேன்மனநாடியே ✻
சிந்தையாயதிவேகமாகவெசெல்லும்போதவர்தம்முடன் ✻
பிந்திமுந்தியுமேகவுற்றனர்தேவர்மாமுனிபிரளையம். (௮௨)

செங்கண்மாலுநடந்துவேகமாய்செல்லவேசெழுந்தாரமாம் ✻
பங்கயப்புனல்மேவுதும்பியின்பயமகன்றிடவானுற ✻
செங்கதிர்த்திகழ்கோடிபோலவேதேசுகொண்டவந்திகிரியை ✻
மங்கைநாயகனேவியேமுந்திவந்துநின்றனன்கரையின்வாய். (௮௩)

மண்டலமிருபிளவதாகவுமாதிரங்களும்வெடிபட ✻
விண்டலங்கள்பிளந்ததாகவுமேருவுமிகவுருகவே ✻
குண்டலஞ்சிரசுந்துளங்கிடகும்பியையப்பொருகரவிரு ✻
துண்டமாகவெசெய்துமீண்டரிகையிலாழியுநின்றதே. (௮௪)

வேறு

கரவுதானென்றுவானிற்கதிரவன்கதியிற்செல்லும் *
கரவுதானின்றிருந்தநிலைதனைக்கரந்துபோய *
திரமெனக்கமலந்தன்னிற்றிரிந்திடுங்கரவுமெல்லாம் *
பரமெனக்கென்றுமாயன்பக்கலிற்சேர்ந்தவாறே. (அரு)

சீதரன்சங்கந்தன்னைதொனித்தனன்செவிடுபட்டு *
வேதனிந்திரனீசானன்விண்ணவர்மெய்மறந்து *
சீதரச்சலதிமேருசுழன்றுடன்றெளிவுகொண்டு *
மாதவன்மீதினின்றுசொரிந்தனர்மலரின்மாரி. (அசு)

அந்தரத்திடையின்பேரியதிரவேமுழங்குந்தேவ *
துந்துமிசின்னங்காளேச்சொல்வகைப்பல்லியங்கள் *
திந்திமிதிமிதியென்னதேவர்கள்ஜெயஜெயென்ன *
வந்தனன்செங்கண்மாலும்வாரணத்தருகிலப்போ. (அஎ)

நீரிடைநெடிதுநாளாய்நிலையற்றுநின்றயானைப் *
பாரியக்கரவுமாளக்கண்டுதன்பயமகன்று *
காரியமுடிக்கவிங்குகாரணமாகவந்த *
சீரியதிருமாறன்னைநோக்கியேசிரசையாட்டும். (அஅ)

ஆடியசிரசின்மீதுவரிமலர்க்கையைவைத்து *
வாடினதுயரமெய்திமனமொருமித்துநம்மை *
நாடினையினியோர்நாளும்நாசமேவாராதென்று *
நீடியவுடலைக்கையாற்றடவினனெடியமாலும். (அகூ)

தடவியவரியின்கையைத்தந்தியுந்தன்கைநீட்டி *
அடவுடன்மோந்துக்கொண்டுவரவிலாப்புளகமாகிக் *
கடவுளின்கருணையாலேலாங்காரமேசெய்துநின்ற *
உடனெமுன்னுளிலுள்ளவுருவெனக்கொண்டதாங்கே. (கூ௦)

சுரர்பதியரனயற்குத்துதிக்கவும்வணங்கவெட்டா *
வரிதனைவலமாய்வந்துவஞ்சலித்தெதிரினின்று *
திருமகளுறையுமார்புந்தேசுலாமுகமுநோக்கிப் *
புரியவகுணங்களெல்லாம்பத்தியாய்துதிக்கலுற்றான். (கூக)

திரியவன்றனக்குப்பொன்னின்சீர்முடியளித்தமாலே *
உறுதியாய்ப்பிரகலாதற்குதவியசிங்கருபே *
மறிகரனுேதுமூலமந்திரப்பொருளேயாதி *
திரிபுரதகனஞ்செய்யுஞ்சேவகபோத்திபோத்தி. (௬௨)

கல்லுருமாறிநின்றன்கழற்றுகள்கதுவாமுன்னம் *
நல்லுருபெற்றதென்னுேநாதனேமடுவிலுற்ற *
வல்லுருவிடங்கர்வாயின்மடங்கவேவவுமத்தவென்றன் *
தொல்லுருதொலைக்குமாறுதோன்றினேவென்முனென்றே (௬௩)

பண்டுநான்செய்தபாவம்பகடெனப்பெயரைத்தாங்கிக் *
கண்டமாவிலங்குக்கெல்லாங்காலனென்றெள்வதாகக் *
தண்டசத்துறையுமிந்தகண்டகன்றன்மேலன்பும் *
உண்டெனுமொழிவிளங்கவுகந்துநீவந்ததன்றே. (௬௪)

மூன்றுமூன்ருகியோதியுறுபொருட்கப்பால்வேறுண் *
டென்றுரைக்கினுநீயையாவெண்ணுதற்கரிமையாகித் *
துன்றுமெல்கிரணமும்நீயெனமறைசொன்னுல்மற்ருேர்க் *
குன்றுவதல்லால்வேறுகுணமுண்டோகூறுதற்கே. (௬௫)

மயலெனும்பிறப்பைநீக்கிமாசிலாவுருவம்நல்கித் *
தியக்கமாந்துயரிலாநற்றின்கரையதனிேற்றி *
வியந்தரமன்னபேதைவெம்மறலறுத்தபெம்மா *
நயக்கணேயனேயேனென்முனற்றவமுயன்றதென்ருன். (௬௬)

தண்பெருசலதிபூத்தத்தையுறுமொக்குளேபோல் *
திண்ணிற்றவண்டம்நின்னுட்டோன்றியேகரக்கும்பக்கம் *
கண்சொடுவாயாற்சொல்லவொக்குமோகருணைவாரி *
எண்ணுறுமறைக்குமெட்டாவெழிலுடையமரரேறே. (௬௭)

ஈசனேதேவர்க்கெல்லாமிறைவனேதிகழ்வைகுந்த *
வாசனேயடியார்க்கென்றும்வரதனேயனந்தவெய்யோன் *
தேசுறுவடிவேயுன்னைச்சிந்தையிற்றரிசிப்பார்க்கு *
மாசிலாப்பதவிநல்குமாயனேசரணமென்றே. (௬௮)

இறைஞ்சியேநின்றயிந்திரப்பிறச்தியுமன்றனையேநோக்கித் *
துறந்தசனைதீமையெல்லாஞ்சுகமினிபெறுவாயென்று *
அறந்திருநாதன்சொல்லவர்சனுமர்ஞூபர்ன *
நிறந்தனையெய்திமோக்ஷநிலயதுபெற்றவாறே. (௯௯)

கரவெனுமுருவமாறிக்கந்தருவவடிவமாகிப் *
பரமனைத்தொழுதுவேச்தியலர்மகள்பாதஞ்சேர்ந்துத் *
திரமெனுங்கீதம்பாடித்தேவர்கள்வாழுகின்ற *
புரநிலையாகப்பெற்றுப்போயினனாகுமென்பான். (௱)

இந்தநற்கதையைக்கேட்டுவெழிற்பரிச்சித்துராஜன் *
அந்தமாரிஷிபதத்தையஞ்சலிசெய்துநோக்கி *
இந்திரத்தூய்மனாகுமெனுமிருவர்க்குநேராய் *
நந்தல்வந்துற்றவாறுநம்பிநீயருள்தியென்றான். (௱௧)

சிந்துபூதலத்தையாண்டசெழுமுடியரசர்தம்மில் *
கந்தலிலறத்தின்கண்ணேசாதனைகின்ற *
இந்திரத்தூய்மனென்பானெழிற்பெயருடையாண்டுச் *
சந்ததிவழிவந்துற்றேன்சதுரங்கபலமுமுள்ளோன். (௱௨)

அன்னவன்றவஞ்செய்போதுவகத்தியன்வருதல்கண்டு *
சென்னியைக்குனியானாகச்சீறியேசாபமிட்டான் *
மன்னனைத்திந்தநிஞமடேச்சுரன்றன்பாலன்பு *
துன்னநீயளிக்கவென்னவளித்தனன்தும்பியானான். (௱௩)

கானகத்திருந்துபன்னாள்சரிணியாய்க்கழித்துவேந்தன் *
ஞானநாயகன்பதத்தைநண்ணினனென்றுசொல்வான் *
மோனமாமிருடிநீரின்மூழ்கிடத்தாளைப்பற்றி *
ஈனமாமுதலையைப்போலிழுத்தனனாகுமென்பான். (௱௪)

மந்திரவிருடிதானுமனதினிற்றியானஞ்செய்து *
இந்தமாமுதலையாகியிருவெனச்சபித்துப்போனான் *
தந்தியின்றாளைக்கவ்வச்சக்கரத்திருகூறாக்கக் *
கந்தருவடிவமாகிகதிதனையடைந்தவாறே. (௱௫)

இத்தலந்தன்னிலுள்ளோர்யாவராகிலுமென்விண்டு *
பத்தராயிருந்தோர்க்கென்றும்பயமிலைத்துன்பமில்லைக் *
குற்றமுங்குறைவுமில்லைக்குலவழித்தாழ்வுமில்லைப் *
பற்றிடுவினையுமில்லைப்பகையிலைப்பரிச்சித்தேகேள். (௯௬)

சத்தியவசனமாகச்சாற்றுவேனுலகின்மீது *
அத்தியினுயிரைக்காத்தோனம்புயமலர்நற்றாளைப் *
பக்தியாற்றொழுதபேர்க்குப்பழவினைநீங்கிஞான *
முத்தியேபிறவிநீங்குமோக்ஷமுஞ்சித்தியாகும். (௯௭)

பெற்றிடுந்தந்தைதாய்சேய்பெண்டெனுஞ்சுற்றத்தாரில் *
நற்றிபபொருளைநம்பினலமிலையரியின்மீது *
பற்றியநிலையினிற்சப்பலிக்குநற்கருமமெல்லாம் *
உற்றிடுமுத்தியென்றேயுரைத்தனர்சுகருமப்போ. (௯௮)

மொழிந்திடுஞ்சுகனைநோக்கிமொய்நகைவதனத்தோடும் *
எழுந்துநின்றிறைஞ்சியந்தவிராஜனும்புளகமாகி *
அழுந்துமஞ்ஞானம்விட்டுயரிகதைகேட்கஞானக் *
கொழுந்தெழும்விரக்காயன்புகொண்டுகைகூப்பிநின்றான். (௯௯)

புடவியிற்றருமநீதிபுரந்திடும்பரிச்சித்தேகேள் *
படவரவணையின்மேவும்பரமனார்பக்கம்நின்ற *
[illegible]கரன்மேகவாகன்வேதனைவிரும்பிடாமல் *
கடறருமாதைநோக்கிக்காதலோடுரைக்கலுற்றார். (௱)

மறந்திடாதெனதுநெஞ்சமலரின்மாமகளேவுன்னை *
மறந்திடுமடியாரொன்னைமனதுநொந்தழைக்கும்போது *
மறந்திடுஞ்சகலலோகவண்மையுமற்றுளோரை *
மறந்துசாதுவையேகாக்கவருவனென்றுரைக்கலுற்றார். (௱௧)

செந்திருமடந்தைதானுஞ்செப்புவாளரியைநோக்கி *
எந்தநேரமுமுன்பாதமிதயத்தினிலையாக்கொண்ட *
எந்தனுக்கினிவேறேதுயிறைவனேயுத்தன்பின்னே *
வந்தனனென்றுபின்னுமனமகிழ்ந்துரைக்கலுற்றாள். (௱௨)

தீனர்களிளைத்தபோது செல்வமீந்தருளவேண்டும் ❋
தீனரைப்பொருந்தி நின்றதீவினையகற்றவேண்டும் ❋
தீனருக்குறுதியான செல்வமுமளிக்கவேண்டும் ❋
தீனரக்ஷகனென்றியாருஞ்செப்பிடுந்தேவதேவே. (௱௰௩)

என்றிடுங்கமலமாதோடெழிற்படைக்கொண்டல்வண்ணன் ❋
நின்றிடுமூர்த்தியான கருடன்மீதேறிநேரில் ❋
துன்றிடுமுநிவர்வேதன்சுரர்பதியடையமூர்த்தி ❋
அன்றவர்யாருங்கேட்கவடைவுடனுரைக்கலுற்றான். (௱௰௪)

அனைவருங்கேளுமிந்தவாகமவிதிப்படிக்குத் ❋
தினமருணுதயமுன்னந்தெளிந்து நித்திரையினின்று ❋
மனதினிற்கள்ளமின்றிவாரணமோக்ஷந்தன்னை ❋
அனுதினந்துதிசெய்பவர்க்கருள்வனம்வைட்டையென்றே. (௱௰௫)

சங்கச்சக்கரத்தைத்தொனித்துக்தேவதேவனுஞ்சார்ங்கபாணி ❋
இங்கிதமாகச்சென்றானிணையில்வைகுந்தத்திற்குச் ❋
சங்கரனயன்மற்றோருமவரவர்தானஞ்சேர்ந்தார் ❋
பொங்கமாய்ச்சுகரெல்லாம்புகன்றனர்பரிச்சித்துக்கே. (௱௰௬)

---

தேவர்கள்வாழியெட்டுத்திசையிலுள்ளோர்கள்வாழி ❋
மூவரும்வாழியாதிமூலமும்வாழியிந்தப் ❋
பூவுலகெங்கும்வாழிப்பொதுவர்தங்குலமும்வாழி ❋
யாவரும்வாழிவாழியநமதுஜெயமாய்வாழி. (௱௰௭)

சுகர்பரிச்சித்துக்கன்பாய்ச்சொற்கஜேந்திரன்மோக்ஷத்தை ❋
ஜகதலமிசைபேசிச்சாற்றுவானாரோவென்னில் ❋
நக்கீரன்றனைவளர்த்தநற்குலவேங்கபூபன் ❋
மகவெனவீறுங்கச்சிவாழ்திருவடியான்றானே. (௱௰௮)

---

கஜேந்திரமோக்ஷம் - முற்றும்.

---

இஃது

திருவண்ணாமலை, வேங்கடாசலமுதலியாரால் அடிக்கப்பட்டது.

